# திருப்புகழ் ஒளிநெறி

(அருணகிரி நாதர்)

தொகுதி - 2

ஆராய்ச்சிப் பகுதி - தலைப்பு 53 - 125


வி.சி. சசிவல்லி





உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# திருப்புகழ் ஒளிநெறி

## (அருணகிரிநாதர்)

## தொகுதி 2

### (ஆராய்ச்சிப் பகுதி - தலைப்பு 53 - 125)

*வி.சி. சசிவல்லி*



**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**

*இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113*

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tiruppukaḻ Oḷineṟi - Part 2 |
| Author | : | Dr. V.C. Sasivalli |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai - 600 113.<br>Ph: 22542992 |
| Publication No. | : | 574 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Year of Publication | : | 2007 |
| Paper Used | : | 18.6 Kg. TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xii+310 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 90/- (Rupees Ninety Only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Luz, Mylapore, Chennai - 600 004 |
| Subject | : | Concordance of Tiruppukaḻ |

*முனைவர் ம. இராசேந்திரன்*
*இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*
*சென்னை - 600 113*

# முகவுரை

தொல்காப்பியத்தில் முதல்பொருள் நிலமும் பொழுதுமே.

கருப்பொருளின் முதலில் தெய்வம் இருக்கிறது.

சங்க இலக்கியக் காலத்தில், வழிபாட்டுக் கூறுகள் வாழ்க்கையின் இயல்பான நடைமுறைகளாக வெளிப்படுகின்றன.

நீதி, காப்பிய, பக்தி இலக்கியங்களில் கடவுளின் செல்வாக்கும் அதிகாரமும் வெளிப்படுகின்றன.

இவ்வாறு காதல், வீரம், அறம், பக்தி என்று தமிழ் நோக்கும் போக்கும் கடந்த காலம் முதல் இலக்கியங்களில் பதிவாகி வருகின்றன.

விளைபொருளைக் கொடுத்துவிட்டு மக்கள்தம் வாழ்க்கைக்குத் தேவையான பொருளைப் பெற்றுச் சென்ற ஊர்களில் பெரிய பெரிய கோயில்கள் இப்போதும் காட்சிகளாக நிற்கின்றன.

அவை சைவசமயக் குரவர்களால், ஆழ்வார்களால் பாடல் பெற்றவை; பாடலில் இடம்பெற்றவை.

கோயில்களை எழுப்பியவர்கள் அரசர்கள், வணிகர்கள்.

கோயில் இருக்குமிடம் - சந்தை கூடுமிடம். சந்தை மக்கள் கூடுமிடம்.

மக்கள், வழிபாட்டிற்கும் வாழ்க்கைப்பாட்டிற்குமாகக் கோயிலிலும் சந்தையிலும் கூடினார்கள்.

கூடிய மக்களுக்குக் கோயிலில் திருவிழாக்கள். திருவிழாவைக் காணவும் மக்கள் கூட்டம். குறிப்பிட்ட ஒரு காலத்தில் குறிப்பிட்ட ஓர் ஊரில் கோயில் வழிபாடு, சந்தை, திருவிழா.

சுற்றுப்பட்ட கிராமங்களிலிருந்தெல்லாம் விளைபொருளைச் சுமந்து வந்து கொடுத்துவிட்டு விழா முடிந்து வீடு திரும்பும்போது வேண்டிய பொருள்களை மக்கள் சுமந்து சென்றிருக்கலாம்.

கூட்டமாக வந்து செல்வதும் பாதுகாப்பைத் தந்திருக்கிறது. மக்கள் பாதுகாப்பாக வந்து செல்லவும் வணிகம் நடைபெறவும் கோயில், வழிபாடு, திருவிழாக்கள் பயன்பட்டிருக்கின்றன.

வாழ்க்கை முறையும் தேவையும் மக்களைக் கூடச்செய்த இடம் வழிபாட்டுத் தலமாகவும் சந்தையாகவும் திருவிழாக்கூடமாகவும் கலை நிகழ்ச்சிக் களமாகவும் விளங்கியிருக்கலாம்.

கோயில்களின் கல்வெட்டுகளில் நிலமாற்றம், நிலக்கொடை, தானம், பண்டமாற்று முறைகள் பதிவாகியுள்ளன.

இந்திரவிழா: பூம்புகார்த் துறைமுக நகரில் சோழ மண்டலத்தில் ஆண்டிற்கு ஒருமுறை கூடும் பெரிய சந்தை நாளாக இருந்திருக்கலாம்.

பக்தி வாழ்க்கைக்குமட்டுமின்றி வணிகத்திற்கும் பெரும்பங்காற்றி வந்து கொண்டிருக்கிறது.

இன்றைய நிலையில் சந்தைகள் போக்குவரத்து முன்னேற்றத்தால் கிராமத்திலிருந்து நகரத்திற்கும் மாநகரப் பகுதிகளுக்கும் புலம் பெயர்ந்து விட்டன.

பாடல் பெற்ற கோயில்கள் நகர, மாநகர மக்கள் சென்று வழிபடும் சுற்றுலா இடங்களாகவும் ஆகிவிட்டன.

ஊர்மக்களின் கூட்டம், திருவிழா, கலை நிகழ்ச்சிகள் கிராமக் கோயில்களில் குறைந்து போய்க்கொண்டிருக்கின்றன.

நகர் மற்றும் மாநகர்ப் பகுதிகளில் கூட்டமும், திருவிழாவும், கலை நிகழச்சிகளும் பெருகிக் கொண்டிருக்கின்றன.

ஆங்கிலப் புத்தாண்டு போன்ற பண்டிகைகள் மதம் கலக்கின்றன; கடக்கின்றன.

மக்களை ஒழுங்குபடுத்தவும் ஒரு வாழ்க்கைமுறைக்குள் முறைப்படுத்தவும் அரசர்களுக்கும் ஆட்சியாளர்களுக்கும் மதம் தேவைப்பட்டிருக்கும்போல.

ஒழுங்குமுறையில் தங்களது வாழ்க்கையை முறைப்படுத்திக்கொள்ளப் பக்தர்களுக்கும் மதம் தேவைப்பட்டிருக்கும் போல.

மக்களின் வாழ்க்கை முறையை மதம் சார்ந்த கட்டமைப்பிற்குள் நிறுவக் கலை இலக்கியங்கள் பயன்பட்டிருக்கும்போல.

ஆகவே கலை, இலக்கியப்போக்குகளை ஆட்சியாளர்களும் வணிகர்களும் தங்களது தேவைகளுக்கேற்ப ஆதரவளித்துப் போற்றியிருக்கக் கூடும்.

மக்களின் நம்பிக்கை, வழிபாடு, வாழ்க்கை முறை ஆகியவற்றை மதமே கட்டமைக்கும்போல.

மக்களின் முறைப்படுத்தப்பட்ட வாழ்க்கைமுறைக்கேற்ப விளை பொருள்கள் சேகரிக்கப்பட்டுக் காலவேறுபாடுகளுக்கேற்பத் திட்டமிடப் பட்டுச் சந்தைப்படுத்தப்பட்டு வருகின்றனவோ!

ஆட்சியும் வணிகமும் ஒன்றை ஒன்று சார்ந்தும், ஒன்றில் ஒன்று செல்வாக்கு ஏற்படுத்தியும், ஒன்றை ஒன்று பயன்படுத்திக் கொண்டும் வருவதில் வரலாறு போய்க்கொண்டிருக்கிறது.

வழிபாடு வளர, வணிகம் பெருகும்; வணிகர்கள் மகிழ அரசும் நிலைக்கும்.

பல கடவுள்கள்; பல மதங்கள்; பல வணிகங்கள்; எனவே ஆட்சிகளும் பல.

உலகமயமாதலில் பக்தி, வணிகம், ஆட்சி, கடவுள், வழிபாடு, வாழ்க்கை முறை, மதம் ஆகியவை ஒற்றைப் பரிமாணத்தை நோக்கி நகரலாம்.

எனவே, பயன்தருவதைப் பாதுகாத்து வளர்த்தெடுக்கும் முயற்சியில் உலக அமைதி நிலைக்கப் பொதுமக்கள் அல்லாடும் நிலைக்கு ஆளாகின்றனர்.

மக்கள் கடவுளை நம்புகிறார்கள். பக்தி, வணிகம், ஆட்சிமுறை, நம்பிக்கையின் நீட்சிகளாகின்றன. ஒரே வாழ்க்கை முறைக்கும் ஒழுங்கு

முறைக்கும் உலகைக் கடத்திச் செல்கிற வணிக நோக்கத்திற்குப் போக்கு வரத்தும் அறிவியலும் கணினியும் பெருமளவு துணைசெய்கின்றன.

கால ஓட்டத்தில் பக்தியும் பல்வேறு தேவைகளின் ஊடே வளர்த் தெடுக்கப்பட்டு வந்துகொண்டிருக்கிறது.

அருணகிரிநாதரின் திருப்புகழ்,

> ஐயா அருணகிரி அப்பா உனைப்போல்
> மெய்யாக ஓர்சொல் விளம்பினர்யார் - வையகத்தோர்
> சாற்றரிது என்றுசெற்றார் தன்அனையர் முக்கண்எந்தை
> நாற்றிசைக்கும் கைகாட்டி னான்

என்று தாயுமானவரின் பாராட்டுக்குரியது.

சாதி மதப் பேதமற்று அனைத்து மக்களும் கலந்து பாடி ஆடி மகிழும் சந்தம் நிறைந்து, புகழுக்கும் திருவைச் சேர்த்துக்கொண்டது திருப்புகழ்.

> செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு
> செப்பென எனக்கருள்கை மறவேனே

என்று அருணகிரிநாதரே திருப்புகழ் பெற்ற கதையைச் சொல்கிறார்.

முன்னரே வெளிவந்துள்ள தேவார ஒளிநெறி, திருவாசக ஒளிநெறி, திருக்கோவையார் ஒளிநெறி நெறிவழியே தற்போது திருப்புகழ் ஒளிநெறி நூல் வெளிவருகிறது.

இந்த நூல் திருப்புகழ்ப் பாக்களைப் பகுத்து, நுணுகி ஆய்ந்து, பல்வேறு தலைப்புகளில் எடுத்தாளப் பெற்றுள்ள கருத்துகளையும் இடங்களையும் பட்டியலிட்டு விளக்குகின்றது.

இந்நூல், ஒளிநெறி இலக்கிய மரபில் தோன்றியவரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் முதுநிலை ஆராய்ச்சியாளராகப் பணிசெய்து பணிமூப்புப் பெற்றவருமான முனைவர் வி.சி. சசிவல்லி அவர்களின் உழைப்பின் வெளிப்பாடு. அவர்களின் உழைப்பும் ஆற்றலும் போற்றுதலுக்கு உரியன.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களைத் தமிழுலகம் என்றும் நன்றி பாராட்டும்.

சிறந்த தமிழ்ப்பணிகளை அடையாளம் கண்டு ஊக்கப்படுத்திவரும் மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் அவர்களுக்கு நன்றி.

தமிழ்ப்பணிகளின் வளர்ச்சிக்கு ஆற்றுப்படுத்திவரும் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் செயலாளர் முனைவர் கி. இராசமாணிக்கம் இ.ஆ.ப. (ஓய்வு) அவர்களுக்கும் நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத்துறை அரசுச் செயலாளர் திரு. கோ. சந்தானம் இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூலை ஒளிஅச்சுக்கோப்புச் செய்த நிறுவனக் கணிப்பொறியாளர் திரு. கோபிநாத், இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார் ஆகியோருக்கும் பாராட்டுகள்.

இயக்குநர்

# பொருளடக்கம்

பக்கம்

# முன்னுரை

*அறிய அறிய அறியாத அடிகள் அறிய அடியேனும்*
*அறிவுள் அறியும் அறிவூற அருள்வாயே*

**(திருப்புகழ் 718)**

பழங்காலம் முதற்கொண்டு முருகக் கடவுளைத் தமிழ்க்கடவுளாகப் போற்றுவது மரபு. தொல்காப்பியத்தில் "சேயோன் மேய மைவரை உலகமும்" என்ற குறிப்பால் முருகவேள் குறிஞ்சி நிலத்திற்குரிய கடவுளாக உணர்த்தப்பட்டுள்ளதைக் காணலாம். சங்ககால இலக்கியங்களான பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகியவற்றினின்றும் முருகக்கடவுள் சிறப்பாக வழிபடப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. சிலப்பதிகாரக் காப்பியத்திலும் சிவன், திருமால், முருகன் மூவர் சிறப்புகளும் கோயில்களும் பேசப்பட்டுள்ளன. பிற்காலத்திலும் முருகபிரானை வழிபட்ட அடியார்கள் பலர் இந்நாட்டில் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களுள் முருகனின் திருவருளில் ஈடுபட்டு மிகப்பெரிய 'திருப்புகழ்' என்ற பாக்கடலை வழங்கியவர் அருணகிரிநாதர் ஆவார்.

அருணகிரிநாதர் நினைக்க முக்தி தரும் தலமாகிய திருவண்ணாமலையில் வாழ்ந்தவர். கிபி. 1450ஆம் ஆண்டில் இருந்த பிரபுடதேவ மாராயர் காலத்தவர். இறையருளால் அருணகிரியார் பலவிதப் பேறுகளைப் பெற்றார். சுந்தரமூர்த்தி நாயனார்க்கு இறைவன் பாட அடியெடுத்துக் கொடுத்தது போல அருணகிரியார்க்கு முருகக்கடவுள் 'முத்தைத் தரு பத்தித் திருநகை' என வண்ணப்பாவாக அடியெடுத்துக் கொடுத்து அருளினார் எனப்படும். அருணகிரியார் இசையோடு தாளமும் ததும்பிப் பொலிய ஆசுகவியாகச் சந்தப்பாடல்களைப் பாடுவதைக் கேட்டுத் திருவண்ணாமலை வாழ்மக்களும், சுற்றியுள்ள ஊர்மக்களும் இவரிடத்து வியப்பும் பக்தியும் அன்புங் கொண்டனர். இங்ஙனம் முருகப் பெருமானுடைய திருவருளால் அற்புதப் புலமையைப் பெற்ற இவரை மக்கள் 'வாக்குக்கு அருணகிரி' என்று போற்றி மகிழ்ந்தனர்.

அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள் மொத்தம் 16,000 என்றாலும் இன்று நமக்குக் கிடைத்துள்ள பாடல்கள் 1320 ஆகும். அருணகிரியாரின் பாடல்களுக்குத் திருப்புகழ் எனப்பெயர் சூட்டியவர் வயலூர் பொய்யாக் கணபதி என்பதை அருணகிரியாரின் வாக்காகிய "செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பென எனக்கருள்கை மறவேனே" என்பதிலிருந்து அறியலாம். இறைவனிடம் வாக்கு வரம்பெற்ற அருணகிரியாரும் தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என உலகுக்குத் திருப்புகழாம் அமுதத்தை வாக்கின் பல்வகைத் திறனும் விளங்கப் பாடி அளித்துள்ளார்.

அருணகிரிநாதர் இவ்வுலக மாயையுட்பட்டு வருந்தும் ஆன்மாக்கள் நன்னெறியைக் கடைப்பிடித்து ஈடேற வேண்டும் என்ற நல்ல நோக்கத்தில் உலகத்துள்ளீர்! ஈதல் எனும் அறத்தை மறவாது செய்யுங்கள்; அப்போது உண்மைப் பொருள் தானே விளங்கும்; அப்பொருள் விளக்கமுற அதனின்றும் உண்மை இன்பம் புலப்படும்; அவ்வின்பம் பெருகப் பெருக இருவினை, மும்மலம் ஆகியவை ஒடுங்கி மெய்வீடு கிடைக்கும் எனத்திருப்புகழில் விளக்கிக் காட்டியுள்ளார். மேலும் திருப்புகழ்ப் பாடல்களை நியமமுடன் ஓதுவார்க்கு அட்டமா சித்திகளும் உண்டாகும்; துன்பங்கள் விலகும்; வறுமையும் பகையும் நீங்கும்; வேதம் முதலான எல்லா நூல்களையும் கற்ற பயன் உண்டாகும்; சாந்தமும் நல்லறிவும் உண்டாகும்; நோய்கள் நீங்கும்; திருமணம் நடைபெறும்; சுகவாழ்வு கிடைக்கும்; இசையறிவு பெருகும்; திருப்புகழ் காலத்தில் இருந்த பழக்க வழக்கங்களை அறிய முடியும்; முருகன் தலச்சிறப்புகளைத் தெரிந்துக் கொள்ள முடியும்.

இத்தகைய அரிய கருவூலமாகத் திகழும் அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்களுக்கு வழிகாட்டியாக அமைவது 'திருப்புகழ் ஒளிநெறி' என்னும் இவ்வாய்வு நூலாகும். திருப்புகழ்ப் பாடல்களிலுள்ள பொருளை அவ்வத்தலைப்பின் கீழ் விளக்கமாய் எடுத்துக் காட்டும் காரணத்தால் இவ்வாராய்ச்சி நூலுக்குத் திருப்புகழ் ஒளிநெறி எனப்பெயரிடப்பட்டது. ஒளிநெறி என்னும் இச்சொற்றொடர் திருஞான சம்பந்தர் அருளிய திருவெழுகூற்றிருக்கையில் வரும் "ஓரால் நீழல் உன்கழல் இரண்டும் முப்பொழுதேத்திய நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை என்ற அடிகளில் வருகின்றது.

திருப்புகழ்ப் பாடல்களின் சாராம்சமான பொருள்களை எல்லாம் பாகுபடுத்தி, அகர வரிசையில் 168 தலைப்புகளில் அமைந்த திருப்புகழ் ஒளிநெறி என்ற இந்நூல் மூன்று தொகுதிகளாக வெளியிடப்படுகிறது. முதல் தொகுதி 1-52 ஆராய்ச்சி தலைப்புப் பொருள்களும், இரண்டாம் தொகுதியில் 53-125 தலைப்புப் பொருள்களும், மூன்றாம் தொகுதியில் 126-168 முடிய உள்ள தலைப்புப் பொருள்களும் அடங்கியுள்ளன.

**பாடல் எண்களின் விளக்கம்**

தணிகைமணி வ.சு. செங்கல்வராயன் அவர்கள் அரிய உரை எழுதி வெளியிட்டுள்ள 'முருகவேள் பன்னிரு திருமுறை' என்ற நூலில் தரப்பெற்றுள்ள திருப்புகழ்ப் பாடல் எண்களே இந்தத் திருப்புகழ் ஒளிநெறி என்ற நூலில் பாடல் எண்களாகத் தரப்பெற்றுள்ளன. ஒரு சொல்லுக்கு அல்லது ஒரு பொருளுக்கு நேரே தரப்பெற்றுள்ள எண் திருப்புகழ்ப் பாடல் எண்ணைக் குறிக்கும். ஒரு சொல் அல்லது பொருள் ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களில் வந்திருந்தால் அந்தப் பாடல்களின் எண்கள் அனைத்தும் அந்தச் சொல் அல்லது பொருளுக்கு நேரே குறிக்கப்பட்டுள்ளன. இன்ன எண்ணுள்ள பாடல் இன்ன தலத்திற்குரிய திருப்புகழ், அந்தப் பாடலின் தொடக்கம், அந்தப் பாடல் இன்ன பொருளில் பாடப்பட்டது என்று அறிந்து கொள்வதற்காகப் பாடல் எண்களின் விளக்கம் என்ற ஓர் அட்டவணை முற்பகுதியில் அச்சிடப்பட்டுள்ளது. இதில் திருப்புகழ்ப் பாடல்களின் தொடக்கம், அப்பாடலுக்குரிய தலம், பாடற்பொருள் ஆகியவை குறிக்கப்பெற்றுள்ளதால் அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்கள் அடங்கிய வேறு எந்தப் பதிப்புக் கிடைத்தாலும் இவ்வாராய்ச்சி நூலைப் பயன்படுத்த முடியும்.

'அகப்பொருள்' என்னுந் தலைப்பை முதலாவதாக்கிப் பிற எல்லாத் தலைப்புகளையும் அகராதி முறையாக அமைத்து இந்நூல் அச்சிடப்படுகின்றது. எந்தெந்த தலைப்புகள் இவ்வாராய்ச்சியில் வருகின்றன என்பதைக் காட்ட "ஆராய்ச்சித் தலைப்புகளும் தலைப்புகளின் எண்களும்" என்னும் ஓர் அட்டவணை முற்சேர்க்கையாக இந்நூலில் இடம்பெற்றுள்ளது. ஆராய்ச்சிக் குறிப்புகள் எழுதிய போது சில எண்கள் விடுபடல் சில செய்திகள் விடுபடல் போன்ற குறைகள் இருக்கலாம்.

ஆன்றோர் அவையெலாம் பொறுத்தருள வேண்டுகின்றேன். திருப்புகழ் ஒளிநெறி என்ற இந்நூல் அருணகிரிநாதரின் திருப்புகழ் அமுது என்னும் அருட்கருவுலத்திற்குப் பொருந்திய திறவுகோலாகும். இந்நூல் திருப்புகழ் அன்பர்களுக்கும் இந்நூலில் ஆராய்ச்சி மேற்கொள்பவர்களுக்கும் பெரிதும் துணைபுரியும்.

திருப்புகழ் ஒளிநெறி என்ற தலைப்பில் திட்டப்பணி (1998 - 2000) செய்ய எனக்கு வாய்ப்பளித்த தில்லி மனிதவள மேம்பாட்டுக் கலைத்துறையைச் சார்ந்தவர்கட்கு என்றென்றும் என் நன்றி உரித்தாகும். இந்நூல் அச்சிடப்பெற்று வெளிவர உதவிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கும் அதற்குக் காரணமாயிருந்த இயக்குநர் **முனைவர் ம. இராசேந்திரன்** அவர்கட்கும் என் உளம் நிறைந்த நன்றியைக் கூறக் கடமைப் பட்டுள்ளேன். இந்நூல் அச்சாகி வெளிவர வேண்டும் என்பதில் பலவகையிலும் எனக்கு ஊக்கமளித்த நிறுவன நூலகர் திருமதி R. பார்வதி அவர்கட்கும், இந்நூலின் மெய்ப்பினைத் திருத்தப் பெரிதும் உதவிய திருமதி ஞானபூரணி, திரு. தணிகைநாயகன், திரு. கண்ணதாசன் ஆகியோர்க்கும், இந்நூலினைச் சிறந்த முறையில் ஒளி அச்சுக்கோப்பு செய்த கணிப்பொறியாளர் திரு.. S. கோபிநாத் அவர்கட்கும் என் மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை **வி.சி. சசிவல்லி**
2006

## 53. தன்னை நிந்தித்தல்

ஆசா பாசன் 853

ஆசார வீனன் 1210

ஆதாளி வாயன் 611

ஆதுலன் 842

ஆபாசன் 583

ஆபாதன் 350

இட்டுணாப் பொறியிலி 1208

இடக்கன் 134

இயல்பிலி 1009

இழிக்குண பாதகன் 923

இன்சொல் வாசக மொழிவன
இவையில
சம்ப்ர தாயனை அவலனை 773

ஈனன் 56

உணர்விலி 1009

உணர்விலி செபமுதலொன்று
தானிலி நிறையிலி
முறையிலி, அன்புதானிலி,
உயர்விலி 749

ஏடெழுதாமுழு ஏழை 56

ஏதன் 56

ஏதனை மூடனை ஈனனை
வீணனை 56

ஏழையடிமை 39

ஒட்டாரப்பாவி 1122

ஓதுமுத்தமிழ் தேராவ்ரு தாவனை
வேதனைப்படு காம
விகாரனைஊனமுற்றுழல்
ஆபாச ஈனனை
யோக முற்றுழல் ஆசாப
சாசனைமோக முற்றிய
மோடாதி மோடனை
ஊதியத் தவம்நாடாத கேடனை
அன்றிலாதிப்
பாதகக் கொலையே சூழ்சுபாடனை
நீதிசற்றுமிலா கீதநாடனை
பாவியர்க்குளெ லாமாது ரோகனை
பாடுபட்டலை மாகோப லோபனை
வீடு பட்டழி கோமாள
வீணனை 996-1

கச்சையன் 279

கசடன் 133, 302

கசடனாய் 170

கசடனெனை 142

கசடனைக் குண அசடனை 302

கட்டன் 875

கடைநாயேன் 1220

கண்டகன் 1103

கதிபெற விதியிலி 866

கதியிலி 1009

கபடன் 221, 449, 1012

கபடி 121

கயவன் 297

## 54. திசைகள்



## 55. தியானம்



## 56. திருக்குறள்



## 57. திருநீறு

## 58. திருப்புகழ்



### திருப்புகழ் ஓதுவதால் பயன்

உருக்கும் நிசிக்கரு வறுக்கும்
பிறவாமல்
நெருப்பையும் எரிக்கும்
பொருப்பையும்
இடிக்கும் நிறைப் புகழுரைக்குஞ்
செயல் 263

### திருப்புகழின் ஆற்றல்

சினத்தவர் முடிக்கும் பகைத்தவர்
குடிக்குஞ் செகுத்தவர் உயிர்க்குஞ்
சினமாகச் சிரிப்பவர் தமக்கும்
பழிப்பவர் தமக்கும் திருப்புகழ்
நெருப்பென் றறிவோம் 263

## 59. திருமால்

### 1. அசுரரை வென்றது

வளர்நி சாசரர் தங்கள்
சிரம்பொடி படவி ரோத
மிடுங்குல சம்ப்ரமன் 22

வன்னி யொத்த படைக்க லாதிய
துன்னு கைக்கொ ளரக்கர் மாமுடி
மண்ணி லற்று விழச்செய்
மாதவன் 830

### 2. அவதாரங்கள்

ஆமை கயலெனச் செயங்கொள்
கோல
குறள் அரித்தடங்கையான
அரவணைச் சயந்தன் 1271

**மச்சாவதாரம் (1)**
**வேதத்தை மீட்டது**

சிறுத்த செலு வதனு ளிருந்து
பெருத்த திரை யுததி கரந்து
செறித்த மறை கொணர நிவந்த
ஜெயமாலே 245

மகர சலநிதி முழுகி விளையாடி
1096

வேத மீண கமலக்கணர் 964

**கூர்மாவதாரம் (2)**

பணப்பத்திக் கணத்துத்திப்
படுக்கைக் கச்சபத்து 467

**வராகவதாரம் (3)**

கோலவுரு வாயெழுந்து
பாரதனையே யிடந்து
கூவிடு முராரி 327-1

சூகரத் தொடம்பு தானெடுத்து
வந்த சூதன் 229

படியை இடந்தான் 1091

**நரசிம்மாவதாரம் (4)**

அங்கைத் தரியென வேயொரு
பாலகன்
இன்பக் கிருபைய தாயொரு
தூண்மிசை
அம்பற் கொடு அரியாய்
இரண்யாசுரன்உடல்பீறி
அண்டர்க்கருள் பெருமான்
656

அசுரேசன் மார்பை யிடந்து
பசுங்குடர்
சேர வாரிய ணிந்த நெடும்புயல் 88

அரிஒருமுறை யிரணிய வலனுயிர்
நுங்குஞ் சிங்கம் 115

அருமறை நூலோதும்
வேதியன்இரணிய ரூபா
நமோவென
அரிகரி நாராய ணாவென ஒருபாலன்
அவனெவன் ஆதாரமே
தெனஇதனுள னோவோது
நீயென
அகிலமும் வாழ்வான நாயகன்
எனவேகி
ஒருகணை தூணோடு மோதிட
விசைகொடு தோள்போறு வாளரி
உகிர்கொடு வாரா நிசாசரன் உடல்
பீறும் 1137

இருவுரு வாகித் துலங்கி 1173

உரியதவ நெறியில்நம
நாராயணாயவென
ஒருமதலை மொழியளவில் ஓராத
கோபமுடன்உனதிறைவன்
எதனிலுளன் ஓதாயடா
வெனுமு
னுறுதூணில் உரமுடைய
அரிவடிவதாய்
மோதி வீழவிரல் உகிர்புதைய
இரணியனை
மார்பீறி வாகைபுனை உவணபதி
நெடியவன் 874

எதிர்த்துக் காட்டெனா அசடன்
இரணியன் உரத்தைப் பேர்த்தவன்
1182

எழுதரு வேதத்து மன்றி
முழுதினுமாய் நிற்கும்
எந்தை யெனவொரு ஞானக்
குருந்தருளமேவும்
இருவுரு வாகித் துலங்கி
யொருகன தூணிற் பிறந்து
இரணியன் மார்பைப் பிளந்த
தனியாண்மை 1173

கனகன் அங்கையினாலறை தூணிடை
மனித சிங்கமதாய் வரைபார் திசை
கடல் கலங்கிடவே பொருதே
யுகிர்முனையாலே
கதற வென்றுடல் கீணவனாருயிர்
உதிரமுஞ் சிதறாதமு தாயுணு
கமல வுந்திய னாகிய மால் 876

கனகன் மார்பது பீறிய வாளரி 891

குதலையின் சொற்குத் தர்க்க
முரைக்குங்
கனகனங் கத்திற் குத்தி
நிணச்செங்குடர்பிடுங்
கத்திக் குற்ற முகச்சிங்க
முராரி 458

கூடுமுறை நீடு செம்பொன்
மாமதலை யூடெழுந்த
கோபவரி நாரசிங்கன்
327-1

சிங்கம தாகத் திரிந்த மால் 589

சிரமொ டிரணிய னுடல்கிழி
யவொருபொழுதி
னுகிர்கொடு அரியென
நடமிடு சிற்பர் 653

**வாமனாவதாரம் (5)**



**மாவலியின் தலைமிசை தாள் வைத்தது**



**மாவலியைச் சிறைவைத்தது**



**விஸ்வரூபம் எடுத்து, உலகளந்தது**

**அசோதை அறியாமல் பாலுண்டது**

தாமோக முடனூறு பால்தேடி
யுரலூடு
தானேறி விளையாடு மொரு
போதில்
தாயாக வருசோதை காணாது
களவாடு தாமோதரன் 411

**அசோதை உரலோடு கட்டியபோது அழுதது**

இடையர்மனை தோறுநித்த
முறிதயிர்நெய்
பால்குடிக்க இருகையுற
வேபிடித்து உரலோடே
இறுகிட அசோதை கட்ட
அழுதிடு
கொபாலக்ருஷ்ணன் 1101

உரலோடே கார்போலு
மேனிதனைப்
பிணித்தொரு போர்போ
லசோதை பிடித்த
டித்திட காதோடு காது கையிற்
பிடித்தழு 362

**ஆயர்மனையில் பால் தயிர் வெண்ணெய் திருடியுண்டு கயிற்றால் கட்டப்பட்டது**

அண்டர்கள் மனையின் தயிர்
உண்டவன் 3

அளையது திருடி யடிபடு
சிறியவன் 132

ஆயச்செரி மகளிர் உறிகளை
யுடைத்துப்போட்டவர்
மறுக வொழுகயி றடித்திட்
டார்ப்புற அழுது 1182

ஆயர்மனை சென்று பால்தயிர்
அளைந்த ஆரணமுகுந்தன்
974

ஆயர் வாழ்பதி தோறுமுகந் துர
லேறி யேயுறி மீதளை யுங்கள
வாக வேகொடு போத நுகர்ந்தவன்
687

உறிக்குட் கைத்தல நீட்டும்
அச்சுதன் 991

உறிதாவும் ஒருகளவு கண்டுதனி
கோபத் தாய்க்குல
மகளிர் சிறுதும்புகொடு மோதிச்
சேர்த்திடும்
உரலொடு தவழ்ந்த நவநீதக்
கூற்றன் 1172

கொச்சையர் மனையி
லிடைச்சியர் தயிர்தனை
நச்சியெ திருடிய 279

தயிர்ச் சோர னெனுமவுரை
வசைக்கோவ
வனிதையர்கள் தரத்தாடல்
புரியுமரி 165

நவநீதங் குறித்தயில் நேயன் 258

நவநீத திருட்டுப் பாணி 983

நவநீத முந்திருடி உரலோடெ
யொன்றுமரி 109

பரியதோர் கயிறனை கொண்டு
வீசவெ
உறியதோய் தயிர்தனை யுண்டு
நாடியெ
பசியதோ கெடவருள் கொண்ட
மாயவன் 184

பேசா தேபோய் நின்றுறி யிற்றயிர்
வாயா வாவா வென்று குடித்தருள்
408

மத்தோசைப் போக்கிற் றயிருறி
நெய்ப்பாலுக் காய்ச்சிக் கிருபதம்
வைத்தாடிக் காட்டிப் பருகரி 1022

வனிதையர் கரமீதே வேறு
வடிவுகொடுறி
வெணெய் தயிரது வேடை
கெடவமு
தருளிய பொழுதினில் வீசு
கயிறுட னடிபடு சிறியவன்
736

**ஆயமகளிருடன் விளையாடி மகிழ்ந்தது**

கோல முகிலோனுகந்
தோதிடையர் மாதுடன்
கூடிவிளை யாடு சம்போக
374

வடகுல கோபாலர்த மொருபதி
னாறாயிரம் வனிதையர் தோள்
தோய்தரு மபிராம 583

**உலக்கை ராவி கடலிலிட்டது**

உலக்கை ராவி நடுக்கடல்
விட்டவன் 268

உலக கண்டமிட் டாகாச மேல்விரி
சலதி கண்டிடச் சேராய
மாமவருடன்
மடிந்திடக் கோபாலர் சேரியில்
மகவாயும் 940

**கம்சனை அழித்தது**

திடமுள முகுந்தர் கஞ்சன்
வரவிடுமெல் வஞ்சகங்கள்
செறிவுடன் அறிந்து
வென்ற பொறியாளர் 143

வங்காளக் கொண்டல்
வடிவொரு சங்க்ராமக்
கஞ்சன் விழவுதை மன்றாடி
397

**காளிங்க நிர்த்தனம்**

அரவுபொன் முடிமிசை திமித
திமிதிமியென நடமிடுமரி 132

எரியுமிழ் உரக சுடிகையில்
நடநவில் அரி 1009

**குருந்தமரமேல் ஏறியது**



**குவலயாபீடம் என்னும் யானையை அழித்தது**

**சகடு உதைத்தது**

கஞ்சன்விடுஞ் சகடாசுரன்பட
வென்று
குருந்தனிலேறி மங்கையர் கண்கள்
சிவந்திடவே கலந்தரு முறையாலே
கண்டு மகிழ்ந்தழ காயி ருந்திசை
கொண்டு விளங்கிய நாளி லன்பொடு
கண்குளி ருந்திருமால் *111*

சகடு மருத முதைத்த தகவோடே
தழையு மரமு நிலத்தில் மடிய
அமரை விளைத்த தநுவை
யுடைய சமர்த்தன் *188*

தாளால் வலிய சகடிடறி
மாயமாய் மடி படிய நடை
பழகி *1159*

நந்த கோபாலம கீபன் தேவிம
கிழ்ந்து வாழக்
கயிறொ டுலூகல முருள
வுலாவிய கள்வன் *668*

நிரைபரவி வரவரையு ளோர்சீத
மருதினொடு
பொருசகடு வுதையது செய் *145*

மருதிடை போய்ப் போதொரு
சகடுதையா *1273*

வருஞ்சக டறமோதி மருது
குலுங்கி நலங்க
முனிந்திடு வரதன் *775*

**பலகோடி மாதரைப் புணர்ந்தது**

காம பாண மட்ட நந்த கோடி
மாதரைப் புணர்ந்த காளை *786*

**பாரிஜாத மலரைப் பூமிக்குக் கொணர்ந்தது**

இந்த்ர தாருவை ஞால மீதினிற்
கொணர்ந்த சங்கபாணி
*889*

**புல்லாங்குழலூதி நிரை புரந்தது**

ஆநிரை துரந்து *974*

ஆநிரை யாள்பவன் *891*

இனிதூதும் வேயா லநேக விதப்
பசுத்திரள்சாயாமல் மீள
அழைக்கும் அச்சுதன் *362*

கதறு காலி போய்மீள *1056*

கல்லுருக வேயின்கண்
அல்லல்படு கோவம்பு
கல்வருக வேநின்று
குழலூதும் *389*

குழலிசை யதுகொ டறவெருள்
சுரபி குறுநிரை யருளி *1079*

நிரைக் கொண்டு வளைத்தே
மகிழச்சுதன் *868*

நிரை பிறகு சந்தாரும் வெதிரு
குழலதுவூதி *396*

மாடோடு போய்வரும்
இடைக்குலத்தவர் 1145

வேயிசை கொடுநிரை பரவிடும்
அபிராமன் 1012

வேயினிசை கொண்டு கோநிரை
புரந்து மேயல்புரி செங்கண்
மால் 120

வேயினிசையது நிரைதனில்
அருள்பவன் 736

**புள்ளின் வாய்க்கீண்டது**

சதமாபுட் பொருது 1273

**பூதனையை அழித்தது**

எத்திய பசாசின் முலைக் குடத்தை
குடித்து முற்றுயி ரிலாம லடக்கி
விட்டுச் சிரித்த 852

கஞ்சன் வஞ்சன் கொஞ்சன்
அவன்விடு மதிசய வினையுறும்
அலகையை
வென்றுங் கொன்றுந் துண்டந்
துண்டஞ் செயுமரி 115

கஞ்சன் விடுத்தெதிர் வருதூது
பேழ்வாய் வேதாளம்பக டைப்பகு
வாய்நீள் மானா ளுஞ்சரளத்தொடு
பேயானாள் போர் வென்றெதி
ரிட்டவன் 408

கருதும் அலகை முலை கோதி
1159

மதியாதே அலகை யுயிர்முலை
யமுதுசெய் தருளிய
அதுலன் 1004

மருக னெனாமற் சூழ்கொலை
கருதிய மாமப் பாதகன்
வரவிடு மாயப் பேய்முலை
பருகாமேல் 1273

**மருதொடு பொருத்தது**

இரு கோரப் பாரிய மருது 1273

இரு திறல் மருதொடு
பொருதவன் 1009

இரு மருதினொடு பொருதாளும்
அபிராமன் 1094

உருவு பெருகயல் கரியதொர்
முகிலெனு
மருது நெறிபட முறைபட
வரைதனில்
உரலி னொடுதவழ் விரகுள 934

பரிவொடு மகிழ்ந்திறைஞ்சு
மருதிடை தவழ்ந்து நின்ற
143

மருத முதைந்த முகுந்தன் 358

மருது நீறதாய் வீழ வலிசெய்
மாயன் 1051

மருது நெறுநெறு நெறுவென
முறிபட வுருளும் உரலொடு
தவழரி 912

**மருதமரமாய் நின்றவர் சாபம் நீக்கியது**



**மலை குடையாக ஆநிரை காத்தது**



**மற்போரிட்டது**



**விளா எறிந்தது**



**(பாரதம் தலைப்பிலுங் காண்க)**

**3. ஆயுதங்கள்**

## 4. உலகெலாம் உண்டது

**5. உறைவிடம்**

வடவேங்கடத்தில் உறைபவ 816

**6. கண்**

செங்கண்மால் பங்கயக்கண் 37

**7. காக்குந்தொழில்**

ஆலில் நின்று உலகோர்
நிலையேபெற

மாநிலங் களெலா நிலையேதரு
ஆயன் 732

பாரே ழோர்தாளாலே
ஆள்வோர் 1043

பிராணாதாரன் 1001

புரக்கக் கஞ்சை மன் 11

மாமாயனாய் உலகளித்த வித்தகர்
1145

விண்பராவ அடுக்கிய மண்பராவ
அதற்குவிதம் பராவ
அடுப்பவன் 939

**8. கொடி**

உவணப் பதாகை 897

கருடக் கேதனன் 108

**9. தமிழ்ப் பயின்றார்பின் திரிந்தவன்**

அகப்பட் டுத்தமிழ் தேர்த்த
வித்தகர்
சமத்துக் கட்டியி லாத்த
முற்றவன் 991

இனிய பாவலன் உரையினில்
ஒழுகிய கடவுள் 1012

பாவலோர்கள் பாடல் கண்டு
ஏகு மால் 1169

வண்டமிழ் பயில்வோர்பின்
திரிகின்றவன் 3

**10. திருமகள் நாயகன்**

அலர்கமல மலர்மடந்தை
அழகினொடு
தழுவுகொண்டல் 144

கஞ்சப் பதமிவர் திருமகள்
குலமகள்
அம்பொற் கொடியிடை புணரரி
210

கருணைக்கடல் பத்ம மலர்த்திரு
வைப்புணர் 728

செந்திருவைச் சேர்களபக்
கொண்டல் நிறத்தோன்
867

திருமகள் நாயன் 261

திருமருவிய திண்புயன் 530

நற்றுணைவ பாற்கடல் வனிதை
சேர்ப்ப 1062

பரிவுசேர் கமலாலய சீதன
மருவார் திருமால் 170

மலர்ந்த பூவின் மங்கை மருவரி
1076

ஜயமகள் கொழுநன் 1094

## 11. திருவுறை மார்பன்

சித்தி ரத்திரு வுரத்த சக்கிரி 565

செந்திரு மார்பில் வீறிய மாயவன் 687

திருக்கலந்திடு மால் 949

திருப்பயில் மார்பன் 258

திருமார்பன் 987

திருமருவுபுயன் 195

திருமார்பகன் 374

திருவளர்மார்பன் 679

திருவு மழகியர் 653

திருவுறைந்துள மார்பகனார் 856

திருவுறை மணிமார்பன் 245-2

பூமாது உரமேயணி மால் 779

மட்டார் மலர்க் கமல முற்றா சனத்திருவை மார்பிற் புணர்ந்த ரகுராமன் 162

வரித்த ரந்துள வணிதிரு மருவிய வுரத்த பங்கயர் 232

## 12. திருமாலும் சிவனும்

**சிவனின் மைத்துனர் (1)**

செகபட்சணண் எனவோதும் விடபட்சணர் திருமைத்துனன் 1216

**திரிபுர சம்ஹாரத்தில் அம்பாய் இருந்தது (2)**

தோகையைப் பெற்ற இடப்பாகர் ஒற்றைப் பகழி 577

**பக்தியுள்ளவர் (3)**

பாடம்பார் திரிசூல நீடந்தா கரவீர பாசந்தா திருமால் 684

## 12. திருமாலும் பார்வதியும்

**உலகீன்ற பச்சை யுமையணன்** 816

## 13. திருமாலும் முருகனும்

கேசவன் பரவுகுரு மலையில் யோகத் தமர்ந்த பெருமாளே 219

## 14. தேவர் சேனை மயங்கச் சங்கநாதஞ் செய்தது

செருக்கெழுந் தும்பர் சேனை துளக்கவென் றண்டமூடு தெழிந்திடுஞ் சங்கபாணி 15

வானு லோகத்தில் அமரேசனோ லிக்கவளை யூதி மோகித்து விழ அருள்கூரும் 1279

## 15. நிறம் (வண்ணம்)

இளங்காளமுகில் 883

எழிலியெ ழிற்பற் றுங்காய மாயவன் 831

எழிலி வடிவினின் 132

கரிய மெய்க் கோல முற்றரி 520

வித்துருபராமர் 591

## 16. பராக்ரமங்கள்

### கடல் கடைந்த வரலாறு (1)

ஆடக மந்தர நீர்க்கசை யாமலு
ரம்பெற
நாட்டி யொராயிர வெம்பகு
வாய்ப்பணி
கயிறாக ஆழி கடைந்து
அமுதாக்கிய நேகர்
பெரும்பசி தீர்த்தருள் ஆயன் 1003

ஒற்றைக் கிரி மத்தைப் பொருது 1

குரைசெறி யுததி வரைதனில்
உலகோடு
முழுமதி சுழல வரை நெறுநெறு
என
முடுகிய முகில் 1079

தமர மிகுதிரை யெறிவளை
கடல்குடல்
மறுகி யலைபட விடநதி யுமிழ்வன
சமுக முககண பணபணி
பதிநெடு வடமாகச்
சகல வுலகமு நிலைபெற நிறுவிய
கனக கிரிதிரி தர வெகு கரமலர்
தளர வினியதொ ரமுதினை
யொருதனி கடையாநின்
றமரர் பசிகெட வுதவிய க்ருபை
முகில் 509

நட்ட நடுக்கடலிற் பெரு
வெற்பினை
நட்டர வப்பணி சுற்றி மிதித்துள
நத்தமு தத்தை யெழுப்பிய
ளித்தவர் 728

பாரமேரு பருப்பத மத்தென நட்டு
படப்பணி சுற்றிடு கயிறாகப்
பாதிவாலி பிடித்திட மற்றொரு
பாதி தேவர் பிடித்திட
கீரவாரிதியைக் கடைவித்ததி
காரியாய் அமுதத்தை யளித்தக்ரு
பாளுவாகிய அச்சுதன் 956

புகழ்ப் பெருங் கடவுளர்
களித்திடும்படி
புவிபொறுத்த மந்தரகிரி
கடலூடே
திரித்த கொண்டல் 848

புனைகடல் முன்பு கடைந்த 2

மகர வாரி கடைந்த நெடும்புயல்
22

மந்தரங் கடலுஞ்சுழன் றமிர்தங்
கடைந்தவன் 604

மலையை மத்தென வாசுகி
யேகடை
கயிறெனத் திருமாலொரு பாதியு
மருவு மற்றது வாலியு மேலிட
அலையாழி கடையா 918

மாமேரு வாரியில் திரித்து
விட்டவர் 1145

வடபராரை மாமேருகிரி யெடா
நடாமோது
மகரவாரி யோரேழும் அமுதாக
மகுட வாள ராநோவ மதிய
நோவ வாரீச
வனிதை மேவு தோளாயிர
முநோவக்
கடையும் ஆதிகோபாலன் 1047

வாரீச வனிதை மேவு
தோளாயிரமு நோவக்
கடையும் ஆதி 1047

வெற்பால் மத் தாக்கிக் கடல்கடை
மைச்சாவிக் காக்கைக் கடவுள்
1021

**அமுதினைத் தேவர்க்குப் பகிர்ந்தளித்தது**

அரியவுடுபதி கடவியாட
கச்சிலம் பொ
டழகுவட மணிமுடிவி யாள
மிட்ட முந்த
அமரரொடு பலர்முடுகி ஆழி
யைக்கடைந்து
அமுதாக அருளும் அரி 545

ஆலவிட மீசர் பெறுமாறுதவி
யேதேவர் யாவர்களும்
வாழ அமுதே பகிரு
மாமாயனார் 122

க்ஷீரவாரிதி யைக்கடைவித்
ததிகாரியாய்
அமுதத்தை அளித்த
க்ருபாளுவாகிய அச்சுதன்
956

தேவர் வாழன் றுகந் தமுதீயும் 35

அமுதைச் சிவபத்தர்க் கருளியது
திரையிற் பொற்கிரி யாடவும் வாசுகி
புனைவித் துத்தலை நாளமு
தார்சுவை
சிவபத் தர்க்கிது வாமென பகிர்
அரிராமர் 765

**கடலில் தோன்றியவற்றைப் பகிர்ந்தளித்தது**

அஞ்சு மங்குலி மந்திரஞ் செல்வ
முஞ்சுகம் பெற
எந்த வாழ்வும் வந்த ரம்பை
யெனும்ப கிர்ந்து
நடங்கொளுந் திருமங்கை
பங்கினன் 604

**கடலில் தோன்றியவை**

லக்ஷ்மி பாரி சாதமு தற்பல
சித்திகள்
வருமாறு க்ஷீரவாரிதியைக்
கடைவித் ததிகாரியாய் 956

**திருமால் நிறம் கறுத்தது**

வெற்பால் மத்தாக்கிக்
கடல்கடை மைச்சாவிக்
கடவுள் 1021

**கஜேந்திரன் என்ற யானைக் கருளியது (2)**

அன் று வாவிவாய் நாகம் ஓலிட
பிடித்தசக்கிர வாளேவியே
கரவினைத் தறித்தவர் 1145

ஆதிசர ணெனக்கயங் குலாவ
முதலையைக்
கிடங்கில் ஆரவுடல் தனைப்
பிளந்த அரிநேமி 1271

ஆனைக்கினி தாயுத வீயருள்
நெடுமாயன் 967

ஆனைமடு வாயி லன் று
மூலமென வோல மென்ற
ஆதிமுதல் நாரணன் 708

உலவுமலை செப்பைச்
செவிக்கட் செறித்து மிக
விரைவில் உவணத்திற்
சிறக்கப்ரியத்தில் வருமொரு
மாயோன் 879

கடகரி யஞ்சி நடுங்கி வருந்திடு
மடுவினில் வந்துத வும்புயல் 775

முதலை மடுவினில் அதவிய
புயலெனா 304

யானை அஞ்சல் திருமூல 76

வாரணத்தினை யேகராவுமு
னேவ ளைத்திடு போது மேவிய
மாயவன் 655

வெங்கை யானை வனத்திடை
துங்க மாமுதலைக்கு
வெருண்டு மூலமெனக்
கருடனிலேறி
அதற்குவிதம் பராவ அடுப்பவன்
939

வேழத்தின் ஆபத்தை மீள்வித்த
மால் 1036

வேழம் எனையாளென்
றிடர்கொடு
மூலந் தொடாவுட னோதும்
இடமிமை
யாமுன் வருமாயன் 669

**காகாசுரனுக்கருளியது (3)**

காது மொருவிழி காக முற
அருள் மாயனரி 225

**சுக்கிரனது ஒருவிழியை
அழித்தது (4)**

சுக்கிரன் அரிய விழிகெட 653

**திருமால் சக்கரம் பெற்ற
வரலாறு (5)**

.......... மாசலந்தரன் நொந்து வீழ
உடல்தடியு மாழி தாவெ னம்புய
மலர்கள் தசநூறு தாளி டும்பகல்
ஒருமலரி லாது கோவணிந்திடு
செங்கண்மால் 80

**நரகரி (6)**

நத்தத் தைச்சக் ரத்தைப் பத்மத்
தைக் கைப்பற்றிப் பொருமாய
னரிக்கு மரிக்கு மெரிக்கும் விருப்புற
நசிதரு நிசிசர ருடகுட லிடல் செய்த
நரகரி யொரு திருமால் 245-2

**முராரி (7)**

பிரசண்ட மரகத முராரி 1019

## 17. பள்ளி கொள்ளுதல்

கலக்கஞ் சிந்திடக் கண்டுஞ்
சிடுமாலும் 32

**ஆலிலையிற் பள்ளி**

ஆல்புறத்து அலைமேவிப்
பெருங் குறோட்டை விட்டுறங்கு
காற்றெனப் பிறங்கவே 1207

ஆலிலையில் அன்று
துயில்மாயன் 974

ஆலிலையில் மால் 1215

கருணை மால் துயிலாலிலை 170

மாலேர் பாயோ 150

**கடலிற் பள்ளி**

அலைமோதும் உததி மீதிலே
சாயும் 1056

ஆரவாரஞ் செயும் வேலை மேல்
கண்வளர்ந்த தாதி மாயன்
35

ஆலமொன்று வேலையாகி 76

ஆழி இரங்கு தொலை
திருவரங்கர் 975

### 18. பிரமனை ஈன்றது



### பிரமன் சிறைப்பட்டதைச் சிவனுக்கறிவித்தது



### வேதத்தைத் தேடித் தந்தது



### 19. புல்லாங்குழல் ஊதுவது

*புல்லாங்குழலிசை மகிமை*

அளையில் உரைபுலி பெறுமக
வயில்தரு
பசுவின் நிரைமுலை யமுதுண
நிரைமகள்
வசவ னொடுபுலி முலையுண
மலையுடன் உருகாநீள்
அடவி தனிலுள உலவைகள்
தளிர்விட மருள மதமொடு
களிறுகள் பிடியுடன்
அகல வெளியுயர் பறைவகள்
நிலம்வர
விரல்சேரேழ் சுருதி உடையவன்
*60*

## 20. பெருமை

அகிலமும் வாழ்வான நாயகன் *1137*

அண்டர்க் கருள்கூரும் *48*

அண்ட பந்திகள் தாமாய் *46*

ஆதனுந் தசமீது மால் *104-1*

ஆதி நாரணன் நற்சங்க பாணியன்
ஓது வார்களுளத் தன்பன் *123*

உங்கள் சங்கரர் தாமாய் *46*

உம்பரர் கோமான் ராகவன் *880*

எங்குங் கலக்கஞ் சிந்திடக்கண்
துஞ்சிடுமால் *32*

எண்டிசை திகழும் புகழ்
கொண்டவன் *3*

எழுகு நிறை நாபி அரி *325*

ஒன்றினுங் கடை தோயா
மாயோன் *46*

கருதிய ஆறங்க வேள்வி யந்தணர்
அரிகரி கோவிந்த கேச வென்றிரு
கழல்தொழு சீரங்க ராசன் *504*

குணத்ரய நாதன் *258*

சரியையுடன் க்ரியை போற்றிய
பரமபதம் பெறுவார்க்கருள்
தருகணன் ரங்க
புரோச்சிதன் *331*

சுருதி மாமொழி வேதியன்
வானவர் பரவுகேசன் *527*

செகச்செஞ் சோதியு மாகிய
மாதவன் *27*

ஞால முண்ட பிராணா தாரன்
*1001*

திமிரமிகு சிந்து வாய்விடச்
சிகரிகளும் வெந்து நீறெழத்
திகிரிகொள நந்த சூடிகைத்
திருமால் *212*

திருக்குந் தாபதர் வேதிய ராதியர்
துதிக்குந் தாளுடை நாயகன்
*27*

தேச மடங்கலும் ஏத்து
மைப்புயலாய நெடுந்தகை
*925*

நிகில செகதல முரைசெயும் அரி
*934*

நீயாய் நானாய் *46*

நீர்சூழ் அம்பரம் புனை பாராய் *46*

படியெலா முடியநின்
றருளுமால் *1111*

பரம்பரர் *2*

பரவிடு மவர்சிந் தையர்விட
முமிழும் படவர
வணைகண்டுயில் மால் 531

பரவுவார் வினைகெட
அருளுதவி 743

மங்குலின்புறு வானாய் வானூடு
வந்திரைந் தெழு நீராய் 46

வணத்த ரம்பர முறவிடு
கணையினர் 232

வாளமுழு தாளும் ஓர் தண்டுழாய்
தங்கு சோதி மணி மார்ப 93

வேதந் தொழு திருமாலும் 1040

## 21. பொன்னுலகம் பெற உதவியது

பன்னாள் இறைஞ்சும் அன்பர்
பொன்னாடுறங்கை
தந்து பன்னா கணைந்து சங்க
முறவாயிற்
பன்னூல் முழங்க லென்று விண்ணோர்
மயங்க நின்று பண்ணூது கின்ற
கொண்டல் 993

மாறி லண்டர் குடிபுகுத மாறு
கொண்ட ரகுபதி 141

## 22. மத்தளம் வாசித்தல்

திரிரிரி தித்திதி. ...... தொதித்தோ
தென அரி மத்தள மீதார் 701

## 23. மன்மதன் தந்தை

இரதிவேள் பணி தந்தை 22

## 24. மார்பில் அணிவன

ஆதிகேசவப்ர சங்கன் என்று
வாழ்மணி மார்பன் 889

ஆரத் துளவார் திருமார்பினன்
967

ஓர்தண்டு ழாய்தங்கு சோதிமணி
மார்ப 93

திருத்துளவ்ணிமார்பர் 728

துளசி . . . தோண்மாலை 1153

துளபமணி மார்ப 697

நல் துளப மாலையை மார்பணி
மாயவன் 527

நறைபுட்ப நற்றுளவன் 928

மொய்த்த மணத்துழாயோன் 838

## 25. வாகனம்

உவண ஊர்தி 1056

உவணத்திற் சிறக்கப்ரியத்தில்
'வருமொரு மாயோன் 879

உவணமேற் கனகோடுதா வானே
போதாள்வான் 1062

ககபதி மிசை தோற்றிய மகபதி
1203

கருடன் மிசைவரு கரிய புயல் 395

கருடனி லேறி 939

கருடா சனர் 812

கொற்றவு வணமிசை வருகேசன்
279

புயகேசன் கணபணாமுகங் கிழிய
மோதுவெங் கருட வாகனந்
தனிலேறும் புயல் 1205

புளினாகம் உகந்தவன் 1002

*26. வியாபகம்*



## 60. திருமால் திருநாமங்கள்

## 61. திருமுருகாற்றுப்படை



## 62. திருவிளையாடற் சரிதங்கள்

## 63. தினைப் புனம்

## 64. தென்றல் காற்று



## 65. தேவசேனை

### 1. திருநாமங்கள்

### 2. தேவசேனை இந்திரன் மகள்

### 3. தேவசேனை இந்திராணி மகள்



### 4. தேவசேனையின் உருவ வர்ணனை



### 5. தேவசேனை உறைவது



### 6. ஐராவதம் மேல் வீற்றிருப்பது



### 7. சரஸ்வதி இலக்குமி போற்றுவது

### 8. தேவசேனையின் பொருள் வளம்

இடி முன்னமலி குலிசமும் இலகிடு
கவள தவள விகடதட கனகட
இபமும் இரணிய
தரணியும்உடையதொர்
தனியானை 1008

### 9. தேவசேனை முத்தியளிப்பவள்

செழுமுத்து மார்பின்
அமுதத்தெய் வானை
திருமுத்தி மாது 764

வினையானவை தொடரறுத்திடு
மாரிய கேவலி 918

### 10. தேவசேனை வள்ளி (இருவரையுங் குறிப்பவை)

இருமங்கை 855

இருவர் 542

இனிய மடவார் 1070

எங்கு மிலகு திங்கள் கமல
மென்று புகலு முகமாதர் 85

கயங் குறவஞ்சி 464

குறத்தி யானை 431

நாரி யிருவோர் 428

பெண்கள் 613

மணமுணர் மடந்தைமார் 575

மான் போன்ற பொற்றொடிகள்
804

மானார் 1041

வல்லிமார் 417

வளிதெய்வானை 760

## 66. தேவமகளிர்

### பொது



### இசைபாடி விளையாடல்



### வேதம் ஓதுதல்



### சிறப்பு

இந்திராணி



### இரதி



### கார்த்திகை மாதர்

## 67. தேவர்கள்

## 68. தேவாரம்



## 69. தேள்



## 70. தேன்

# 71. தொகை தொகைக் குறிப்பு

## 72. நட்சத்திரம்



## 73. நரகம்



**நரகில் வீழ்வோர்**

அரகரா எனாமூடர்
திருவெ ணீறிடா மூடர்
அடிகள் பூசியா மூடர்
அறிவுநூல் கலா மூடர்
நெறியிலே னிலாமூடர்
அறம் விசாரியா மூடர்
நரகேழெிற் புரள வீழ்வர் *769*

ஓது வித்தவர் கூலி கொடாதவர்
மாதவர்க்கு அதிபாதக மானவர்
ஊசலிற் கனலாய் எரிகாளையர்
மறையோர்கள் ஊர்தனக்கிடரே
செயும் ஏழைகள்
ஆர்தனக்கு முதாசின தாரிகள்
ஓடி உத்தமர் ஊதிய நாடினர்
இரவோருக் கேது மித்தனை
தானமிடாதவர்
பூதலத்தினில் ஓரமதானவர்
ஈசர் விஷ்ணுவை சேவை
செய்வோர்தமை
இகழ்வோர்கள்
ஏக சித்த தியானமிலாதவர்
மோக முற்றிடு போகிதம்
ஊறினர்
ஈனர் இத்தனை பேர்களும்
ஏழ்நர குழல்வாரே 1149

தோழமை கொண்டு கலகஞ்செய்
குண்டர்கள்ஓதிய நன்றி
மறந்த குண்டர்கள்
சூழ்விரதங்கள் கடிந்த குண்டர்கள்
பெரியோரைத் தூஷண நிந்தை
பகர்ந்த குண்டர்கள்
ஈவது கண்டு தகைந்த
குண்டர்கள்
சூளுற வென்பதொ ழிந்த
குண்டர்கள்
தொலையாமல் வாழ நினைந்து
வருந்துகுண்டர்கள்
நீதியறங்கள் சிதைந்த குண்டர்கள்
மானவகந்தை மிகுந்த குண்டர்கள்
மாயையில் நின்று வருந்து
குண்டர்கள்
தேவர்கள் சொங்கள் கவர்ந்த
குண்டர்கள்
வாதை நமன்றன் வருந்திடுங்குழி
விழுவாரே 711

மாதர் வசமாயுற் றுழல்வாரும்
மாதவ மெணாமற் றிரிவாரும்
தீதகல வோதிப் பணியாரும்
தீநரக மீதிற் றிகழ் வாரே 428

## 74. நவகோள்

சுக்ரன் 452

## 75. நவமணி

## 76. நாகலோக மாதர்

## 77. நாடும் நிலமும்

## 78. நாயன்மார்

### 1. கண்ணப்ப நாயனார்

இதவிய காணிவை ததையென
வேடுவ னெய்திடு மெச்சில்
தின்று லீலாசல மாடும் 668

கூசாது வேடன் உமிழ்தரு நீராடி
யூனுனெனு'முரை
கூறாமனீய அவனுகர்
தருசேடங் கோதாம்
எனாமல் அமுதுசெய் வேதாக
மாதிமுதல் 1210

புனவேடன் 651

### 2. சிறுத்தொண்ட நாயனார்

எண்டோளர் காதல்கொடு
காதல் கறியே பருகு 817

### 3. சுந்தரமூர்த்தி நாயனார்

ஆதரம் பயிலாரூரர் 100

ஒரு சிறுவன் 545

கற்ற தமிழ்ப்புலவன் 182

சுந்தரர் 976

சுந்தரன் 1104

தாழ்வில் சுந்தரன் 721

**சிவபிரான் சுந்தரரைத் தடுத்தாட் கொண்டது**

சாதனங் கொடு தத்தா மெத்தென
வேநடந்து பொய்பித்தா வுத்தர
மேதெனும்படி தற்காய் நிற்பவர்
சடையூடே தாழ்வில் சுந்தர
னைத்தா னொற்றிகொள் நீதி
தந்திர நற்சார் புற்றருள்
சால நின்றுச மர்த்தா
வெற்றிகொள் அரன் 721

**சிவபிரான் தூது சென்றது**

சுந்தரர் பாடல் உகந்திரு தாளை
கொண்டு நல்தூது
நடந்தவர் 976

பரவையொடு அக்காகி விரக
பரிபவ மறவபார் பத்தூரர்
பரவ விரைவுசெல்
மெய்த்தூதர் 944

**சுந்தரர் பொன்வேண்டிச் சென்றது**

இதப்பட்டிடவே கமலாலய
வொருத்திக் கிசைவான
பொனாயிரம் இயற்றப்
பதிதோறும் உலாவிய
தொண்டர் 951

**சுந்தரருக்குச் சிவன் பொதிசோறு கொடுத்தது**

தொண்டர் தாள
இசைக்கொக்கவி ராசத
பாவனை யுளப்பொற்றொடு
பாடிட
வேடையில் இளைப்புக்கிட
வார்மறை
யோனென வந்துகானில்
இதப்பட்
டெதிரே பொதி சோறினை
அவிழ்த்திட் டவிநாசி யிலேவரு
திசைக்குற்ற சகாயன் 951

முதலை யுண்ட பாலகனை மீட்டது

அவிநாசிப் பொய்க்கவி போமாறு மெய்க்கருள் சீரான புக்கொளியூர் 950

கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையில் அப்பரருள் கொண்டு உடலுற்ற பொருள் 398

செறிப்பித்த கராவதின் வாய்மக வழைப்பித்த புராண க்ருபாகர 951

நாடா முடுகு முதலையை வரித்துக் கோட்டி அடியர் தொழ மகவழைத்துக் கூட்டி முறைசெய் தமிழ் 446

## 4. சேரமான் பெருமாள்

ஆதரம் பயிலாரூரர் தோழமை சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில் ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி ஆதியந்தவு லாவாசு பாடிய சேரர் 100

## 5. திருஞான சம்பந்தர்

ஞான பாக்கியர் 924

பரசமய கோளரி 827

புகலிக் கரசு 882

பூரண ஞானமிஞ்சு உரவோன் 84

விருதுகவி 166

அவதரிக்கக் காரணம்

கவுணி யோர்குல வேதிய னாயுமை கனபாரக் களப பூண்முலை யூறிய பாலுணு மதலை யாய்மிகு பாடலின் மீறிய கவிஞனாய் விளையாடிடம்வாதிகள் கழுவேற . . .கொடிய மாறன்மெய் கூனிமி ராமுனை குலையா . . ஆரண வூரென நேர்செய்து...... 841

புத்தர் அமணர் மிகவே கெடவே தெற்கு நரபதி திருநீ றிடவே புக்க அனல்வய மிகஏ டுயவே உமையாள்தன் புத்ர னெனஇசை பகர்நூல் மறைநூல் கற்ற தவமுனி பிரமா புரம்வாழ் பொற்ப கவுணியர் பெருமான் 917

கவுணியர் குலத்துதித்தது

ஓரரசாய் வரு கவுணியோர் குல வேதியன் 841

கவுணிய குலாதித்த 423

கவுணியரில் ஞானபுநிதன் 325

கழுமல பூந்தராய கவுணியர் வேந்த 778

சீகாழியில் அவதரித்தது

காழி மறையோன் 385

காழியில் வருமொரு கவுணியர் மைந்த 768

கொச்சைப் பதிவாழ்வே 386

லோகாயி கனத னாச லாபார
அமுதூறல் கமழும்
ஆரணா கீத கவிதை வாண
*1049*

வற்றா மதுக்கருணை யுற்றே
மறைக் கலைக ளோதித்
தெரிந்து தமிழ் சோதித்
தலங்கலணி யத்தா *162*

விதர மதுர பநுவல் தரு *145*

வெடித்தமணர் கழுவேற
ஒருத்திகண வனுமீள
விளைத்ததொரு தமிழ்பாடு
புலவோனே *310*

வேதக் கவிதரு பால *778*

ஜகதல மதிலருள் ஞான
வாட்கொடு
தலைபறி யமணர் சமூக மாற்றிய
தவமுனி சகமுளர் பாடு
பாட்டென மறைப்பாடி *650*

**முத்துக்குடை, பல்லக்குப் பெற்றது**

கொச்சையிற் சதுர்வேதச் சிறுவ
நிற்கருட் கவிகை நித்திலச்
சிவிகை யைக்கொடுத்
தருளீசன் *762*

**ஞானசம்பந்தரின் அருட் செயல்கள் ஆண்பனைகள் காய்த்தது**

பவமாய்த் தாணது வாகும் பனை
காய்த்தே மணநாறும்
பழமாய் பார்மிசை
வீழும்படி *681*

**ஏடு எதிரேற விட்டது**

அடலெழுது மேடுமெத்த
வருபுனலில் ஏறவிட்டு
அரியதமிழ் வாதுவெற்றி
கொளும் *1101*

அரைக்காடை சுற்றார்
தமிழ்க்கூட லிற்போய்
அனற்கே புனற்கேவ ரைந்த
ஏடிட் டறத்தா யெனப்பேர்
படைத்தாய் *500*

கனப் புனலிற் கனத்த சோலைப்
பதித்தெழுதிப் புகட்ட திறற்
கவிரா சா *135*

சமணர்கள் கழுவினில் அங்கஞ்
சிந்தும் பங்கந்
துஞ்சும்படியொரு தொகுதி
யினுரை நதியெதிர்பட *115*

சீட்டை யெழுதிவை யாற்றில்
எதிருற ஓட்டி யழல்பசை
காட்டி சமணரை சீற்ற
மொடுகழு வேற்ற அருளிய
*399*

மாள அன்றம ணீசர்கள்
கழுவேற வாதில் வென்ற
சிகாமணி *657*

**சமணர் கழுவேற வாதில் வென்றது**

அமணர் கழுவில் விளையாட
வாதுபடை கருது
குமரகுருநாத *863*

அமண ரடங்கலுங் கூட
லிற்றிரண்டு
கழுவி லுதைந்துதைந் தேற
விட்டு நின்ற அபிநவ *567*

வேதம் படியாப் பாதகர்
பாயன்றியுடாப் பேதைகள்
கேசம் பறிகோப் பாளிகள்
யாருங் கழுவேறச்
சிவமாய்த் தேனமுதூறுந்
திருவாக்காலொளி
சேர்வெண் டிருநீற்
றாலமராடுஞ் சிறியோனே
**681**

**திருநீற்றின் பெருமை உணர்த்தியது**

அருகர் கணங்கள்
பிணங்கிடும்படி
மதுரையில் வெண்பொடி
யும்பரந்திட
அரகர சங்கர வென்று
வென்றருள் **323**

கனக சமண் மூங்கர் கோடி
கழுமிசை தூங்க நீறு
கருணை கொள் பாண்டி
நாடு பெறவே **778**

சீல வெண்பொடி யிடாத
வெஞ்சமணர் மாள
வெங்கழுவி லேறு மென்று
பொடிநீறிடுங் கமலபாணி
**766**

தி்ய்யா ரக்கழு வேறிட நீறிடு
கையா அற்புதனே **771**

திருநீறு பரப்பிய தத்திருப்பதி **135**

நற்றிரு நிறே பரப்பி
விளையாடும் **1256**

பாண்டியன் நீறணிய
மொழிவோனே **246**

பொறியிடைச் செழியன்
வெப்பொழிதர . . . .
சிவமணப் பொடிபரப்
பியதிருப் புகலியிற்
கவுணியப் புலவேனே **283**

மதுரையின் மீதால வாயினில்
எதிரம ணாரோர்
எணாயிரர் மறிகழு மீதேற
நீறுபரந்துலாவ **332**

**பாண்டியன் வெப்பு கூன் நீங்கப் பெற்றது**

கூடலான் முதுகூனன் றோட
வாதுயர் வேதங் கூறு
நாவல மேவுந் தமிழ் வீரா
**793**

சிறியகர பங்கயத்து நீறொரு
தினையளவு சென்றுபட்ட
போதினில் தெளிய **181**

தமிழ்செய் மாறர் கூன்வெப்
பொடன்று தவிர **966**

தீரத்திரு நீறுபுரிந்து மீனக்கொடி
யோனுடல் துன்று
தீமைப்பிணி தீரவுவந்த **770**

பஞ்சவன் னீடு கூனு மொன்றிடு
தாபமோடு பஞ்சற
வாதுகூறு சமண்மூகர்
பண்பறு பீலி யோடு
வெங்கழு வேற வோது
பண்டித ஞான நீறு
தருவோனே **236**

பாலறாத் திரு வாயா லோதிய
ஏடு நீர்க்கெதிர் போயே
வாதுசெய் பாடல்
தோற்றிரு நாலா மாயிர

